19th August 1961]

பரங்கிப்பேட்டை, அதிராம்பட்டினம், பாம்பன், தனுஷ்கோடி கீழக்கரை, தொண்டி, கொளச்சல், குலசேகரப்பட்டினம் துறை முகங்கள் பற்றி அரசாங்கம் முக்கியமாகக் கவனம் செலுத்தி வருகிறது. கடலூர்—நாகப்பட்டினம் ஒரு இன்டர்மீடியெட் கோர்ஸ். அதற்கும் முக்கியத்துவம் கொடுத்திருக்கிறோம். இப் பொழுதிருக்கும் நிலைமையில், அதிராம்பட்டினம் துறைமுகம் ரொம்ப நாளாகத் தூர்ந்துபோயிருக்கிறது; எந்தவிதமான போக்குவரத்தும் கிடையாது. அதை எடுத்துக்கொள்வதா, வேண்டாமா என்பதைப் பரிசீலனை செய்ததில் சரியான முடிவு இல்லை என்பதைக் கனம் அங்கத்தினருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*Bridge across Vaigai*

SRI N. R. THIAGARAJAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, திண்டுக்கல் ஹைவேஸ் டிவிஷன், வத்தலக் குண்டு, ராமிநாயக்கன்பட்டி, காமாக்ஷிபுரம் அருகே வைகையில் ஒரு புதுப்பாலம் கட்டத் திட்டமிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The proposals are under the consideration of the Highways Department.

*Arooran Sugar Factory*

* 1263 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத் தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தஞ்சாவூர் மாவட்டம், வடபாதிமங்கலத்திலுள்ள ஆரூரான் சர்க்கரை ஆலைத் தொழிலாளருக்கும் நிர்வாகத்தாருக்கு மிடையே ஏற்பட்ட தகராறு சம்பந்தமாக தஞ்சாவூர் நல்லுறவு அதிகாரியிடமிருந்து அறிக்கை ஏதேனும் அரசினருக்கு வந்துள்ளதா ?

(இ) அப்படியானால், அதன் மீது எடுத்துக்கொண்ட நட வடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes; Sir.

(*b*) Orders have since been issued in the matter. The Union has been informed that as the recommendations of the Wage Board for Sugar Industry are to be implemented in this factory, the issues need not be referred for adjudication.

SRI V. K. KOTHANDARAMAN : இப்பொழுது அங்குள்ள தொழிலாளர்களுக்கும் நிர்வாகத்தினருக்கும் உள்ள உறவு கெட்டிருக்கிறது என்பது உண்மையா? அது சம்பந்தமாக சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த ஆலையில் ஒரு நிரந்தரத் தொந்தரவு இருக்கிறதாக நான் நினைக்கிறேன். இந்தக் கேள்வி போடுகிறபோது என்ன தொல்லை அங்கு இருந்ததோ

[19th August 1961

அதற்குப் பதில் கொடுத்திருக்கிறேன். இப்பொழுது கனம் அங்கத்தினர் கேட்பது, அதற்குப் பின்னால் ஏற்பட்ட ஒரு சச்சரவு பற்றி. அதற்குத் தனியாகக் கேள்வி போட்டால் பதில் அளிக்கிறேன்.

SRI T. SAMPATH : நிரந்தரச் சண்டை சச்சரவுக்கு அடிப்படைக் காரணம் என்ன என்று கனம் அமைச்சர் அவர்கள் சொல்ல முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : தொழிலாளர், முதலாளி என்று இருக்கும்போது இருவரும் ஒத்துக்கொண்டால்தான் சண்டை சச்சரவு இல்லாமலிருக்கும். யாராவது ஒருவர் ஒத்துக் கொள்ளாவிட்டாலும் சண்டை சச்சரவு வந்துகொண்டுதான் இருக்கும்.

SRI J. MATHA GOWDER : அதற்குப் பின்னால் ஏற்பட்ட தொல்லையை அமைச்சர் தெரிந்துக் கொண்டிருப்பார்கள் என்று நினைக்கிறேன். கனம் அமைச்சர் அவர்கள் அந்தத் தொல்லைக்குப் பரிகாரம் தேடியிருக்கிறாரா என்பதைத் தெரிந்துகொள்ள முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பின்னால் வந்த தொல்லையாக இருந்ததால் பேச்சு வார்த்தை நடந்திருக்கிறது. முன்னால் வந்த தொல்லை தீர்ந்துபோய்விட்டது.

SRI A. VEDARATHNAM : முதலாளி-தொழிலாளி தகராறு மாத்திரம் தானா ? அல்லது இடையிலே உள்ளவர்களினால் இந்தத் துன்பங்கள் விளைகின்றனவா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அப்படியும் சில பேருடைய அபிப்பிராயம் உண்டு.

SRI S. M. ANNAMALAI : இப்பொழுது உண்டாகியிருக்கும் தொல்லையின் காரணமாக, தொழிலாளி ஒருவர் உண்ணாவிரதம் இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அது உண்மையா ? அந்த உண்ணாவிரதத்தை நிறுத்துவதற்கு சர்க்கார் எடுத்துக் கொண்ட முயற்சிகள் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : உண்ணாவிரதம் இருப்பவர் இந்த நிமிஷத்தில் சாப்பிட்டாலும் உண்ணாவிரதம் நின்று போய்விடும். உண்ணாவிரதத்திற்கே அவசியம் இல்லை என்று நினைக்கிறேன். பேச்சு வார்த்தை நடந்துகொண்டிருக்கும்போது இந்த விதமாக உண்ணாவிரதம் ஆரம்பித்துவிட்டால் பேச்சு வார்த்தை முறிந்துபோய்விடுகிறது. அதனால் சில கஷ்டங்களெல்லாம் ஏற்படுகின்றன.

SRI M. KALYANASUNDARAM : பேச்சு வார்த்தை முறிந்த பிறகுதான் உண்ணாவிரதம் ஆரம்பிக்கப்பட்டது என்று அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ? கனம் அமைச்சர் அவர்கள் தலையிட்டு புதிதாகப் பேச்சு வார்த்தை தொடங்கியிருக்கிறார்கள் என்பது அவருக்கு ஞாபகம் இருக்கிறதா ?

19th August 1961]

THE HON. SRI R. VENKATARAMAN : 'க்ரானலஜி' கொஞ்சம் சரியில்லை. முதலில் பேச்சு வார்த்தை கமிஷனர் மூலமாக நடத்தினார்கள். அப்பொழுது உடனடியாக ஒப்பந்தம் ஏற்படவில்லை. உடனே என்னிடத்தில் வந்து சொன்னார்கள். சொன்னவுடனே, நிர்வாக சம்பந்தமாக எனக்கு இரண்டு, மூன்று நாட்கள் வேலை இருந்தது. அதற்காகப் போய்விட்டேன். திரும்பிவந்து பேச்சு வார்த்தை ஆரம்பித்தோம். அதற்குள்ளே உண்ணாவிரதம் ஆரம்பித்து விட்டார். உண்ணாவிரதத்திற்கு இவ்வளவு அவசரப்பட வேண்டியதில்லை. உண்ணாவிரதம் என்றைக்கு வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால் அதற்கு அவசியமே இல்லை. கொஞ்சம் அவசரமாக உண்ணாவிரதம் இருப்பதற்கு இப்பொழுது முயற்சி எடுக்கப்படுகிறது என்று நான் நினைக்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : உண்ணாவிரதத்தைப்பற்றிக் கவலைப்படுவதை விட்டு, அமைதி நிலவுவதற்குச் சட்டப்படி எடுக்கவேண்டிய நடவடிக்கை எடுக்கப்படுமா என்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்கின்றேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : சட்டப்படி நடவடிக்கை எடுப்பதானால் கால தாமதம் ரொம்ப ஆகும். சுமுகமாகத் தீர்க்க வேண்டுமென்பது சர்க்காருடைய நோக்கம். அதுதான் லட்சியம். சட்டப்படிதான் நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் சொல்லிவிட்டால், அதன்படி நடக்கத் தயாராயிருக்கிறோம். அதனால் ஏற்படக்கூடிய கால தாமதத்தையும் அவர்கள் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்.

SRI A. A. RASHEED : சில சமயம் எடையைக் குறைத்துக் கொள்வதற்குக் கூட உண்ணாவிரதம் இருப்பது சர்க்காருக்குத் தெரியுமா ? 9-00 a.m.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் ஏதாவது ப்ராக்டீஸ் பண்ணியிருக்கிறாரோ என்னமோ எனக்குத் தெரியாது.

SRI M. KALYANASUNDARAM : பேச்சுவார்த்தைகள் மூலம் சுமுகமாக இப்பிரச்னையைத் தீர்க்க முடியும் என்ற நம்பிக்கை கனம் அமைச்சருக்கு இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : அந்த நம்பிக்கை இன்றல்ல. கடந்த இருபது வருஷ காலமாக எனக்கு உண்டு. அந்த நம்பிக்கையை இழப்பதற்கு நான் இப்போது தயாராய் இல்லை. எந்தத் தொழில் தகராறையும் பேச்சுவார்த்தைகள் மூலம் சுமுகமாகத் தீர்க்க முடியும். கொஞ்சம் பொறுமைதான் அவசியம்.

SRI A. VEDARATHNAM : தகராறுகளுக்குக் காரணம் முதலாளி-தொழிலாளர்களுக்கிடையே சிலர் செய்கின்ற விஷம வேலைகள் தான் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் ஒத்துக் கொண்டிருக்கிறார்கள். இத்தகைய விஷம வேலைகள் நடைபெறுவதன் காரணமாகத்தான் தகராறுகள் வளர்ந்துகொண்டே

[19th August 1961

இருக்கின்றன என்பதால் இனிமேல் இத்தகைய விஷம வேலைகள் நடைபெருமல் தடுப்பதற்கு ஏற்றவகையில் ஏதேனும் நடவடிக்கை எடுக்க அரசாங்கம் முன்வருமா ?

(பதில் இல்லை.)

*Mettur High Level Canal*

DEPUTY SPEAKER : As the hon. Member Sri A. R. Marimuthu who gave notice of this question (No. 1264) is not in his seat, the question and a nswer will be printed in the official proceedings.

* 1264 *Q.*—Sri **A. R. MARIMUTHU** : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மேட்டூர் உயர்மட்டக் கால்வாயின் பாசன விஸ்தீர்ணத்தை அதிகரிக்கும் எண்ணம் சர்க்காருக்கு உண்டா ?

The Hon. Sri P. KAKKAN : No, Sir.

*Statistical Officers*

* 1265 *Q.*—Sri T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Home be pleased to State—

(*a*) the details of the seniority list of the District Statistical Officers and Statistical Inspectors prepared by the department after the integration of services of the transferred personnel;

(*b*) the number of promotions from the Statistical Inspectors to the District Cadre after the integration and their respective ranks in the seniority lists and the principle followed for giving promotions; and

(*c*) whether seniority and confidential reports regarding the respective candidates were taken into consideration; if so, the details thereof?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*), (*b*) & (*c*) A paper [a] is placed on the table of the House.

Sri T. S. RAMASWAMI : May I know how many out of the 50 people in the second list have been promoted to the district cadre? May I know their seriatim number also?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : I have no further information except what has been placed on the table of the House.

Sri T. S. RAMASWAMI : In Part B, four names have been given. May I know whether any further statistical Inspectors or people outside the department have been promoted in the meantime?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : I have no such information, Sir.

---

[a] Printed as Appendix IV on pages 453–455 infra.